85



# திருநெல்லை

## ஆன்மீகத் திங்களிதழ்

விகாரி - ஆடி - 2019 - ஜுலை

கோவிலூர் மடாலயத்தில் நடைபெற்ற
தாலாட்டுப்பாடல் இசைத்தட்டு
வெளியீட்டு விழா

உ
சிவமயம்

# திருநெல்லை

## ஆன்மீகத் திங்களிதழ்

விகாரி – ஆடி – 2019 – ஜூலை இதழ் – 85

சிறப்பாசிரியர் :
**மெய்யப்ப ஞான தேசிக சுவாமிகள்**

ஆசிரியர் குழு :
காப்பியக் கவிஞர் **நா. மீனவன்**
முனைவர். பேரா. **நா. வள்ளி**
பேரா. **நா. சுப்பிரமணியன்**

ஆலோசகர் :
பேரா. தமிழாகரர்.
**தெ. முருகசாமி**

பதிப்பாசிரியர் :
பேரா. **ம. கார்மேகம்**

வெளியீடு :
**கோவிலூர் மடாலயம்**
கோவிலூர் - 630 307.
மானகிரி (அஞ்சல்),
(வழி) காரைக்குடி
சிவகங்கை மாவட்டம்
போன் : 04565 - 236846

அச்சிட்டோர் :
**திருமகள் அச்சகம்**
"ஜெய சௌந்தர்",
7G. ஜவஹர் தெரு. நியூ டவுன்
காரைக்குடி - 630 001.

### பொருளடக்கம்



தனி இதழ் ரூ 10.00
ஆண்டுச் சந்தா ரூ 100.00

85

உ
சிவமயம்

# இறை வணக்கம்

ஆலத்தை உண்டசிவன் அம்மையப்பன் எனவிளங்கும்
அத்தனைக் கொற்றவாள் ஈசன் தன்னை
அழலுருவாய் நின்றானை ஆரூ ரானை
அம்பலத்தில் திருநடம் ஆடு வானைக்

சூலத்தைக் கையேந்தும் சொக்கனாம் மீனாட்சி
சுந்தரனை ஒருபாகம் பெண்ணை வைத்த
சோதியினைக் காமனையே நெற்றிக் கண்ணால்
சுட்டெரித்த பெருமானை உலகு போற்றக்

காலத்தைக் கடந்தானைக் கயலுகளும் கழனிநகர்
கண்டுவந்த கருத்தானை அகத்தி யர்க்குக்
கவின்தமிழைத் தானுரைத்த கயிலை யானைக்
கரியதளைத் தானுடுத்த காத லானை

வேலொத்த கண்ணாளை வேதமுதல் நாயகியாம்
வித்தகியைத் திருநெல்லை என்னும் மாதை
வினைபோக்கி நமைக்காக்க வேண்டு மென்று
வீற்றிருப்பாள் திருவடியை வேண்டு வோமே.



KOVILOOR ANDAVAR ★ KOVILOOR LIBRARY, ★
85


*– காப்பியக் கவிஞர் கவிமாமணி நற்றமிழ் நாவலர். நா. மீனவன்*

# ஆசியுரை

**சீர் வளர் சீர் மெய்யப்பஞான தேசிக சுவாமிகள்**

கல்விக் காலத்தில் வேண்டிய அளவிற்கும் போதிய அளவிற்கும் கல்வி கற்றுத் தேர்ந்த பின்னால் இல்லற வாழ்க்கையிலே அவர்கள் உட்படுத்துவது வழக்கமான ஒன்றாகும்.

திருமண வகைகள் என்பதிலே வேறுபாடுகள் ஏற்படலாம். சங்க காலத்தில் காதல், களவியல் வாழ்க்கை யென்றெல்லாம் விவரிக்கப்படுகிறது. தற்காலத்தில்காதல் கல்யாணம், பெற்றோர் பேசி முடிக்கும் கல்யாணம், கட்டாயக் கல்யாணம், வன்முறைக் கல்யாணம் என்று வகைப்படுத்தலாம். நம்முடைய தமிழ்நாட்டில் பெரும்பாலும் பெற்றோர் பேசி முடிக்கும் திருமணங்களே நடைபெறுகின்றன. குறைந்த அளவிலே காதல் திருமணங்கள் நடைபெறுகின்றன.

எப்படித் திருமணம் நடந்தாலும் இல்லற வாழ்க்கையை எப்படி வாழ வேண்டும் என்பதற்கு அழுத்தமான வரைமுறைகள் உள்ளன. கணவன் மனைவி மனம் ஒத்துச் சிக்கனமாக வாழ்ந்து, பொருள் சேமித்து, உறவினர்களுக்கும், வரும் விருந்தினர்களுக்கும் முகம் சுழிக்காது விருந்து அளித்து உபசரித்து, பாதுகாப்பதும் அவர்களுக்கு உதவுவதும் இல்வாழ்க்கைத் தர்மம் ஆகும்.

அத்துடன் துறவியர்களுக்கு முறையாக, அன்பாக அன்னம் அளித்தல், ஆடை இருப்பிடம் கொடுத்தல் மற்றும் நம் முன்னோர்களுக்கு வழிபாடுகள் செய்து வணங்குதல். இவை அனைத்தும் இல்லறத்தார் கடமையாகும்.

தென்புலத்தார் தெய்வம் விருந்துஒக்கல் தான் என்றாங்கு
ஐம்புலத்தாறு ஓம்பல் தலை. என்று வள்ளுவர் கூறுகிறார்.

தமிழ்நாட்டில் எல்லாச் சமுகத்திலும் இல்லறத்தை நல்லறமாக வாழ்ந்து சுற்றத்தார்க்கும் ஊரார்க்கும் உதவுகிறார்கள்.

பொதுவாக, சம்சார பந்தம் என்று சொல்வார்கள். பந்தம் என்றால் கட்டு. ஆணோ பெண்ணோ குடும்பப் பாசத்தால் கட்டுப்பட்டவர்கள் குழந்தைகள், பெற்றோர்கள்; அவர்களுடைய நலம், கல்வி, மகிழ்ச்சி ஆகியவற்றைச் சிறப்பாக அளித்து வாழ்வார்கள்.

பாசம், அன்பு, தயை, கருணை, அருள் என்று அன்பு செலுத்துவதே பலவித பரிமாணங்களாகத் தமிழில் சொல்லப்படுகிறது.

பாசம் – தன்னுடைய குடும்பத்தாரிடம், மனைவி, மக்கள், பெற்றோர், உடன் பிறப்புகள் இவர்களிடம் காட்டப்படுகின்ற அன்பு பாசம் என அழைக்கப்படும். இதனை ஆங்கிலத்தில் Love, caring, dotting, bond, tender, warm என்று பல வார்த்தைகளாலே விவரிக்கிறார்கள்.

அன்பு – அன்பு என்பது தம்மைச் சுற்றியுள்ள நன்கு பழக்கமான நபர்களுக்கு நாம் அளிப்பது. இதமான வார்த்தை, தேவையான நேரத்தில் உதவுதல், துயரத்தில் ஆதரவு, இவை அன்பின் செய்கைகளாகக் கருதப்படும். ஆங்கிலத்தில் இதனை Affection என்றே அழைப்பார்கள். (மிக நெருக்கமானவர்களுக்கு அளிப்பது Love அடுத்தபடியாக உள்ளவர்களுக்கு அளிப்பது Affection)

தயை – தயை என்பது துயரப்படுகிற விபத்துக் காயங்களால் பாதிக்கப்பட்ட ஜீவன்களுக்கு இரக்கத்துடன் உதவி செய்வது.

கருணை – அன்பு செலுத்துவதிலேயே மேம்பட்ட வகை இதுவாகும். அறிந்தவர் அறியாதவர், விலங்குகள், பறவைகள், தாவரங்கள் அனைத்தின் பாலும் பிரதிபலன் எதிர்பாராது உதவுவது, அன்பு செலுத்துவது, பாதுகாப்புத் தருவது என்பது கருணை என்று அழைக்கப்படும். இதனை ஆங்கிலத்திலே Mercy என்று அழைப்பார்கள்.

அருள் – அருள் எனப்படுவது பரம்பொருளாலே ஜீவர்களுக்கு அளிக்கப்படுகின்ற மேலான அன்பு. இதனை ஆங்கிலத்தில் Grace or Benevolence என்று கூறுவார்கள். இந்த ஒரு சொல் அன்பு சம்பந்தமான மேற்குறிப்பிட்டுள்ள அனைத்துச் சொற்களின் பொருளும் உள்ளடக்கியதாகும். தன் தாய்க்குப் பாசம் காண்பிப்பதாக, அன்பு காண்பிப்பதாகப் பிள்ளை சொல்லலாம்; அப்படி அல்லாமல் கருணை காட்டினேன் அருள் செய்தேன் என்பது பொருத்தமற்ற சொற்களாகும்.

இல்லறத்தார் உழைத்துப் பொருள் ஈட்டிச் சிக்கனமாக வாழ்ந்து சேமித்து அந்தப் பொருளிலே தருமங்கள் கண்டிப்பாகச் செய்ய வேண்டும். இதுவே இல்லறத் தர்மம் என்று அழைக்கப்படுவது.

ஈதல் இசைபட வாழ்தல் அதுவல்லது
ஊதியம் இல்லை உயிர்க்கு

மேற்கூறிய வண்ணம் வாழ்ந்தவர்கள் தன்னுடைய மக்களாலும் உற்றார் உறவினர்களாலும் ஊர் மக்களாலும் திண்ணமாகப் புகழப்படுவார்கள்; அவர் பேரும் புகழும் என்றும் நிலைக்கும்.

வையத்து வாழ்வாங்கு வாழ்பவன் வானுறையும்
தெய்வத்துள் வைக்கப் படும்

என்று வள்ளுவர் சொல்லுவதை வாழ்வீர்களாக. பரம் பொருள் அருளைப் பெறுவீர்கள்.

## சித்த ஞானம் (தொடர்ச்சி)

(காப்பியக் கவிஞர் நற்றமிழ் நாவலர். நா.மீனவன்)

### கடுவெளிச் சித்தர்

கடுவெளிச் சித்தர் வரலாறு முறையாக அறிய இயலவில்லை. இவருக்கு இப்பெயர் வந்த காரணத்தைக் கூற வந்தவர்கள் இவர் சூனியத்தைத் தியானித்துச் சித்தி பெற்றமையால் கடுவெளிச் சித்தர் எனப்பட்டார் என்கின்றனர். கடுவெளி என்றால் வெட்டவெளி என்பது பொருள்; இவர் பாடல்கள் தமிழ் அறிஞர்களால் போற்றப் படுபவை. இவர் காஞ்சியில் சமாதி அடைந்தார் என்பது சிலருடைய கருத்தாகும். இவருடைய வரலாறு முறையாக அறியப்படவில்லை என்ற ஒரு கருத்து நிலவினாலும் சிலர் பலவாறு சில வரலாற்றைக் கூறுகின்றனர். இது எந்த அளவில் உண்மை என்பது தெளிவாகவில்லை. அந்த வரலாற்றுச் செய்திகளைப் பார்க்கலாம்.

மனிதர்களின் பிறப்பை உணர்ந்து இறையொடு இணையச் செய்வதற்காகவே தோன்றியவர் சித்தர்கள். அப்படிப்பட்ட சித்தர்களில் ஒருவர்தான் கடுவெளிச் சித்தர். இவர் திருஇரும்பை மாகாளம் என்றழைக்கப்படும் திண்டிவனத்தில் பிறந்து பலசித்துக்களைச் செய்து மனிதர்களை மகிழ்வித்தார். பின்னர் தஞ்சை மாவட்டம் திருவையாறு அருகில் உள்ள கடுவெளியில் தங்கி அங்கு பல சித்துக்களைச் செய்தார். கடுவெளியில் உள்ள சிவனைப் பரம நாதர் என்று குறிப்பிட்டுள்ளார். இது ஒரு வரலாறாகக் கூறப்படுகின்றது.

மற்றும் ஒரு வரலாற்றைக் காண்போம். இவர் அரிசன வகுப்பைச் சார்ந்த தாய் தந்தையருக்குப் பிறந்தவர் என்றும் கூறுகின்றனர். இளவயதில் இவர் மாடு மேய்க்கும் தொழிலைச் செய்து வந்தார். ஒரு நாள் மாடுகளை மேய விட்டு விட்டு அரசமரத்துப் பிள்ளையார் இருக்கும் குளக்கரையில் தூங்க ஆரம்பித்தார். அப்பொழுது மனத்தை மயக்கும் இனிய நறுமணமும் மணியோசையும் கேட்க உடனே மெல்லக் கண்விழித்தார். எதிரே போர்வையுடன் வாட்டசாட்டமான ஓர் உருவம் நிற்பதைக் கண்டு திடுக்கிட்ட சித்தர் அருகில் உள்ள அரசமரப் பிள்ளையாரைத் தழுவிக் கொண்டார். அவர் உடல் முழுவதும் மின்சாரம் பாய்ந்தது போல் சிலிர்த்தது. தன்னை மறந்த சித்தர் கண்விழித்தார். அப்பொழுது அங்கு நின்றிருந்த உருவம் மெல்ல வந்து சித்தர் தலைமீது கையை வைத்து ஆசீர்வதித்து நீ தழுவியுள்ள பிள்ளையார் 2000 ஆண்டுகளுக்கு முன் உண்டாகியது. என் தாத்தா ஒரு சித்தர்; அவர் வழியில் வந்தவன் நான். நீங்கள் எமது கையால் தீட்சை பெற்றுச் சித்தராக வேண்டும் என்பது விதி. இதனை நீங்கள் தவிர்த்தாலும் உங்களைத் தொடர்ந்து வரவேண்டும் என்பது இறைவன் கட்டளை. ஆதலால் உங்களுக்கு உபதேசம் செய்வேன் என்று கூறி மறைந்து விட்டது. இவ்வாறு ஒரு வரலாறு கூறப்படுகின்றது. இவருடைய சீவசமாதி காஞ்சிபுரம் எகாம்பரநாதர் கோயில் அருகில் உள்ளது என்கின்றனர். அச்சமாதி போதிய பராமரிப்பு இன்றி ஒதுக்குப் புறத்தில் உள்ளது. இசுலாமிய சகோதரர்கள் வாழும் அமுதவள்ளி என்ற வட்டத்தில் உள்ளது.

இவருடைய சித்துகளைப் பற்றிப் பல செய்திகள் கூறப்படுகின்றன. ஒரு சமயம் இவர் இரும்பைக் கிராமத்தில் சிவனை எண்ணித் தவம் செய்து கொண்டிருந்தார். அந்நாட்டில் சரியாக மழை பெய்யவில்லை. அதற்குக் காரணம் இவர் செய்த தவமே என்று கருதிய மக்கள் ஒரு தேவதாசியின் மூலம் அவர் தவத்தைக் கலைக்க முற்பட்டனர். அதனை அறிந்த சித்தர் தவத்தைக் கலைத்துச் சிவப்பணியில் ஈடுபட்டார். ஒருமுறை கோயில் விழாவில் அந்தத் தாசி நடனமாடிய போது அவளுடைய கால் சிலம்பு கீழே விழுவதைக் கண்ட சித்தர் அதனால் விழாத் தடைபடுமோ என்று எண்ணி அச்சிலம்பை அவள் காலிலே விட்டார். இதைக் கண்ட மக்கள் சித்தரை ஏளனம் செய்தனர்.

உடனே சித்தர் சிவனை நோக்கிப் பாடத் தொடங்கினார். அப்பொழுது கோயிலில் இருந்த சிவலிங்கம் மூன்றாக வெடித்தது. இதனைப் பார்த்த மக்கள் சித்தரிடம் மன்னிப்புக் கேட்டனர். மூன்று துண்டுகளாக உடைந்த சிவலிங்கம் ஒன்று கூடின.

**கடுவெளிச் சித்தர் பாடல்கள் (ஆனந்தக் களிப்பு)**

பாபம்செய் யாது) இரு மனமே - நாளைக்
கோபம்செய் யாதேயமன் கொண்(டு) ஓடிப் போவான்
*சாபம் கொடுத்திடல் ஆமோ? - அது*
*தன்னைநம் மாலே தடுத்திடல் ஆமோ?*
*கோபம் தொடுத்திடல் ஆமோ? - இச்சை*
*கொள்ளக் கருத்தைக் கொடுத்திடல் ஆமோ?* 1

விளக்கம் - மனத்தை நோக்கிச் சொல்லுவதாக இந்தக் கண்ணிகள் அமைந்துள்ளன. ஏ! மனமே! ஒரு போதும் பாவமான செயல்களைச் செய்யாமல் இருப்பாயாக! கோபங் கொண்டு பாவச் செயலைச் செய்யாதே! சினங்கொண்டு சாபம் கொடுத் திடாதே. அதனை நம்மால் தடுத்திட இயலுமா! கோபத்தால் சாபம் கொடுக்கின்றோம். அதனை நம்மால் தடுக்க இயலுமா? ஒரு பொருளின் மேல் ஆசை கொண்டு நம் கருத்தை அதன்மேல் செலுத்தலாமா?

*சொல்லரும் சூதும்பொய் மோசம் செய்தால்*
*சுற்றத்தை முற்றாய்த் துடைத்திடும் நாசம்*
*நல்ல பத்தி விசுவாசம் - எந்த*
*நாளும் மனிதர்க்குத் தன்மையாம் நேசம்* 2

விளக்கம் - சூது பொய் மோசம் ஆகியவற்றைச் செய்தால் அவை நம்மையும் நம்மைச் சார்ந்த சுற்றத்தையும் முழுமையாக நாசத்தை உண்டாக்கி அழித்துவிடும். பத்தி விசுவாசத் தோடு இருந்தால் எந்த நாளும் நமக்கு நேசத்தை உண்டாக்கும்.

*நீர்மேல் குமிழிஇக் காயம் - இது*
*நில்லாது போய்விடும் நீஅறி மாயம்*
*பார்மீதில் மெத்தவும் நேசம் - சற்றும்*
*பற்றாது இருந்திடப் பண்ணும் உபாயம்* 3

விளக்கம் - தண்ணீர்மேல் உண்டாகும் குமிழி நில்லாது உடனே

மறைவதுபோல் நம் உடல் அழிந்து போய்விடும். அந்த மாயத்தை நீ அறிக. உலகத்தை மிகவும் நேசி. அதுவே நம்மை எதுவும் பற்றாது இருந்திடப் பண்ணுதற்கு உபாயம்.

*நந்த வனத்தில் ஓர் ஆண்டி - அவன்*
*நாலாறு மாதமாய்க் குயவனை வேண்டிக்*
*கொண்டு வந்தான்ஒரு தோண்டி - அதைக்*
*கூத்தாடிக் கூத்தாடிப் போட்(டு) உடைத்தாண்டி* 4

**விளக்கம்** - நந்தவனத்தில் இருந்த ஓர் ஆண்டி ஒரு குயவனிடம் பத்து மாதங்கள் மிகவும் வேண்டி ஒரு தோண்டியை வாங்கி அதைத் தலைமேல் வைத்தவாறு கூத்தாடிக் கொண்டு வந்தான். தோண்டி தரையில் விழுந்து உடைந்து போனது. மேலோட்டமாகப் பார்த்தால் இது தான் பொருள்.

இங்கு ஆண்டி என்பது ஆன்மா. குயவன் என்று கூறப்படுபவன் படைத்தற் கடவுளாகிய நான்முகன். தோண்டி என்பது உடம்பு. பத்து மாதம் சென்று பிறந்த உடலை உடைய ஆன்மா ஆடாத ஆட்டமெல்லாம் ஆடி முடிவில் இறந்து போகும். இதனை மேலே கண்டவாறு உருவகப்படுத்திப் பாடுகின்றார் சித்தர்.

*தூடண மாகச்சொல் லாதே - தேடும்*
*சொத்துக்க ளில்ஒரு தூசும்நில்லாதே*
*ஏடணை மூன்றும்பொல் லாதே - சிவத்(து)*
*இச்சைவைத் தால்எம லோகம்பொல்லாதே* 5

**விளக்கம்** - நிந்தனையாக எதனையும் சொல்லாதே. நீ எவ்வளவு சொத்துக்களைத் தேடி வைத்தாலும் அதில் ஒரு தூசும் இறுதியில் நிலைக்காது. பொருள் புதல்வர் உலக இச்சை ஆகிய மூன்றின்மேல் விருப்பம் கொண்டால் அது பொல்லாங்கில் முடியும். சிவபரம் பொருள்மேல் இச்சை வைத்தால் எமலோகத்துக்கு அது பொல்லாங்காய் முடியும்.

*நல்ல வழிகளை நாடு - எந்த*
*நாளும் பரமனை நத்தியே தேடு*
*வல்லவர் கூட்டத்தில் கூடு - அந்த*
*வள்ளலை நெஞ்சில் வாழ்த்திக் கொண்டாடு* 6

விளக்கம் - நல்ல வழிகளின் மேல் விருப்பம் கொள். தினமும்பரமனை விரும்பி நாடு. அனைத்துச் செயல்களில் வல்லவராய் இருப்பவர் கூட்டத்தில் சேர்க! அந்த வள்ளலாகிய சிவத்தை நெஞ்சில் இருத்தி வாழ்த்திக் கொண்டாடுக.

*நல்லவர் தம்மைத் தள்ளாதே அறம்*
*நால்எட்டில் ஒன்றேனும் நாடித் தள்ளாதே*
*பொல்லாங்கில் ஒன்றேனும் கொள்ளாதே - கெட்ட*
*பொய் மொழிக் கோள்கள் பொருந்த விள்ளாதே* 7

விளக்கம் - நல்லவர் நம்மை நாடி வந்தால் அவரைத் தள்ளாதே. சரியை கிரியை ஞானம் யோகம் ஆகிய நான்கிலும் அட்டாங்க யோகம் எட்டிலும் ஒன்றைக் கூடத் தள்ளாதே. பொல்லாங்கில் ஒன்றைக் கூட ஏற்றுக் கொள்ளாதே. கெட்ட பொய் மொழிகள் கோள் ஆகியன சொல்லாதே.

*வேத விதிப்படி நில்லு - நல்லோர்*
*வழியினை வேண்டியே சொல்லு*
*சாத நிலைமையே சொல்லு - பொல்லாச்*
*சண்டாளக் கோபத்தைச் சாதித்துக் கொல்லு* 8

விளக்கம் - வேதம் சொல்கின்றபடி நில். நல்லவர்கள் செல்லும் வழியே வேண்டுமென்று சொல். சாதகமான நிலைமையைச் சொல். பொல்லாத விரோதத்தைத் தருகின்ற கோபத்தைக் கொல்.

*பிச்சை என்(று) ஒன்றும் கேளாதே - எழில்*
*பெண்ஆசை கொண்டு பெருக்கமா ளாதே*
*இச்சை அ(து) உன்னை ஆளாதே - சிவன்*
*இச்சை கொண்(டு) அவ்வழி ஏறிமீ ளாதே* 9

விளக்கம் - பிச்சை என்று ஒரு பொருளையும் கேளாதே. பெண்ணாசை கொண்டு அதனைப் பெருக்கி மாளாதே. அவ்வாசை உன்னை ஆளாது.

*மெய்ஞ்ஞானப் பாதையில் ஏறு - சுத்த*
*வேதாந்த வெட்ட வெளியினைத் தேறு - சுத்த*
*அஞ்ஞான மார்க்கத்தைத் தூறு - உன்னை*
*அண்டி னோர்க்(கு) ஆனந்த மாம்வழி கூறு* 10

விளக்கம் – உண்மையான ஞானத்தை அளிக்கின்ற பாதையில் செல். தூய வேதாந்தம் கூறும் வெட்ட வெளியை நாடு. அஞ்ஞானம் தரும் வழியை அகற்று. உன்னை நெருங்கி வந்தோர்க்கு மகிழ்ச்சி தரும் வழியினைக் கூறு.

*மெய்க்குரு சொல்கட வாதே – நன்மை*
*மென்மேலும் செய்கை மிக அடக்காதே*
*பொய்க்கலை யால்நட வாதே – நல்ல*
*புத்தியைப் பொய்வழி தனில்நடத் தாதே* 11

விளக்கம் – மெய்யான குரு சொல்லைக் கடக்காதே. நன்மை தீமைகளால் வரும் செயல்களை அடக்காதே. பொய் வழிகளில் நடக்காதே. நல்ல புத்தியைப் பொய்யான வழி நடத்தாதே.

*கூட வருவ(து) ஒன்(று) இல்லை – புழுக்*
*கூ(டு) எடுத்(து)த் திங்கள் உலாவுவதே தொல்லை*
*தேடரும் மோட்சம் அ(து) தொல்லை – அதைத்*
*தேடும் வழியைத் தெளிவோரும் இல்லை* 12

விளக்கம் – உன் கூட வரும் பொருள் ஒன்றும் அல்லை. ஒரு புழுவின் உடலாகிய கூட்டுக்குள் நிலவை உலா வரும்படி செய்ய இயலுமா? பல வடிவமாக உள்ள மோட்சத்தின் உண்மையான எல்லையை நாம் தேடி அடைய முடியுமா? இதனைத் தெளிந்தோர் எவரும் இல்லை.

*ஐந்து பேர் சூழ்ந்திடும் காடு – இந்த*
*ஐவர்க்கும் ஐவர் அடைந்திடும் நாடு*
*முந்தி வருந்தி நீ தேடு – அந்த*
*மூலம் அறிந்திட வாமுத்தி வீடு* 13

விளக்கம் – இந்த உடல் ஐந்து பேர் சூழ்ந்த காடு. இந்த உடல் 25 தத்துவங்கள் அடங்கி இருக்கும் காடு. இவ்வுடலைப் பற்றுக் கோடாகக் கொண்டு மூலாதாரத்தை வருந்தி நீ தேடுக. அதனை நீ அறிந்தால் முத்தி என்னும் வீடுபேறு கிடைக்கும்.

*உள்ளாக நால்வகைக் கோட்டை – பகை*
*ஓடப் பிடித்திட்டால் ஆளலாம் நாட்டை*
*கள்ளப் புலன் என்னும் காட்டை – வெட்டிக்*
*கனல் இட்(டு) எரித்திட்டால் காணலாம் வீட்டை* 14

விளக்கம் - நமக்குள்ளே மனம் புத்தி சித்தம் அகங்காரம் என்ற நான்குவகைக் கோட்டைகள் உள்ளன. உடல் பகை உள்ளப்பகை ஆன இவற்றை விரட்டிக் கள்ளப் புலன்களாகிய காட்டை வெட்டி அதனை நெருப்பிலே எரித்தால் முடிவிலே முத்தி என்னும் வீட்டைக் காணலாம்.

*காசிக்(கு) ஓடில்வினை போமோ? - அந்தக்*
*கங்கைஆ டில்கதி தானும் உன் டோமோ?*
*பேசமுன் கன்மங்கள் சாமோ? - பல*
*பேதம் பிறப்பது போற்றினும் போமோ?* 15

விளக்கம் - காசிக்குப் போனால் நம்முடைய வினைகள் நீங்குமா? அங்குள்ள கங்கையில் நீராடினால் நற்கதி கிடைக்கும் என்பது உண்மையா? பலவிதமான தத்துவங்களைப் பேசினாலே நம்முடைய கர்மவினை நீங்குமா? நம்மிடையே பலவிதமான வேற்றுமைகளைக் கைக் கொண்டு கடவுளைப் போற்றுவதாலேயே கர்மவினைகள் தொலைந்து போகா.

*பொய்யாகப் பாராட்டும் கோலம் - எல்லாம்*
*போகவே வாய்த்திடும் யார்க்கும் போங்காலம்*
*மெய்யாக வேசுத்த காலம் - பாரில்*
*மேவப் புரிந்திடும் என் அனுகூலம்* 16

விளக்கம் - பொய்யானவற்றைப் போற்றி வணங்கினால் நம்முயிர் இவ்வுலகைவிட்டுப் போம் காலத்தில் நன்மை கிடைக்குமா? தூய தந்திரத்தை மெய்யென்று நம்பினாலும் அதனால் என்ன அனுகூலம்?

*சந்தேகம் இல்லாத தங்கம் - அதைச்*
*சார்ந்துகொண்டாலுமே தாழ்(வு) இலாப்பொங்கம்*
*அந்தம் இல்லாத ஓர் துங்கம் - எங்கும்*
*ஆனந்தம் ஆக நிரம்பிய புங்கம்* 17

விளக்கம் - இறைவன் சந்தேகமே இல்லாத தங்கம். அவரைச் சேர்ந்தால் நமக்கு என்றும் தாழ்வில்லை. முடிவில்லை சிறந்த ஒன்றை அதாவது இறைவனை வணங்கினால் அதுவே நிறைந்த ஆனந்தமாகும்.

*பாரில் உயர்ந்து பத்தி - அதைப்*
*பற்றின பேர்க்(கு) உண்டு மேவரும் முத்தி*

*சீரில் உணர்அட்ட சித்தி யார்க்கும்*

*சித்திக்கு மேசிவன் செயலினால் பத்தி* 18

விளக்கம் - உலகில் உயர்ந்தது பத்தி. அத்தகைய உயர்ந்த பக்தி உடையவர்க்கே கிட்டும் முத்தி. சிவன்பால் அனைவரும் பக்தியைச் செலுத்தினால் சிறப்பான எட்டுவகைச் சித்திகளைப் பெறலாம். சிவனின் செயலும் அதுவே.

*அன்(பு) எனும் நன்மலர் தூவிப் - பர*

*மானந்தத் தேவின் அடியிணை மேவி*

*இன்பொடும் உன்னுடல் ஆவி - நாளும்*

*ஈடேற்றம் தேடாய்நீ இங்கே குலாவி* 19

விளக்கம் - அன்பு என்கின்ற நல்ல மலர்களைத் தூவிப் பரமானந்தம் தரும் இறைவனின் இணைடிகளைச் சேர்ந்து இன்ப முடன் உன் உடல் உயிர் ஆகியவை ஈடேற்றம் அடைய வழிதேடு.

*ஆற்றலும் வீ(டு) ஏற்றம் கண்டு - அதற்(கு)*

*ஆனவழியை அறிந்துநீ கொண்டு*

*சீற்றம் இல்லாமலே தொண்டு - ஆதி*

*சிவனுக்குச் செய்திடில் சேர்ந்திடும் கொண்டு* 20

விளக்கம் - சித்தத்தில் ஆற்றல் உடையவனாய் வீடு பெறுவதற்கான ஏற்ற வழியினைக் கண்டு அதாவது அறிந்து கொண்டு எவ்விதச் சீற்றம் இல்லாமல் ஆதியாகிய சிவனுக்குச் செய்திடும் தொண்டால் ஏற்றம் பெறலாம்.

*ஆன்மாவால் ஆடிடும் ஆட்டம் - தேகத்(து)*

*ஆன்மா அற்றபோதே யாம்உடல் வாட்டம்*

*வான்கதி மீதிலே நாட்டம் - நாளும்*

*வையில் உனக்கு வருமே கொண்டாட்டம்* 21

விளக்கம் - ஆன்மாவைத் தன்னுள் வைத்துள்ள உடல் இவ்வுலக இன்பங்களை நாடி ஆடும் ஆட்டம் ஆன்மா உடலைவிட்டு அகன்றிட்டால் உடல் எவ்வித ஆட்டமும் இன்றி அடங்கும். அதனால் உயிர் உள்ள போதே பரவெளியில் சேரும் நாட்டத்தை நீ நாடினால் உன் நிலை மகிழ்ச்சிக்கு உரியது.

*எட்டும் இரண்டையும் ஓர்ந்து - மறை*
*எல்லாம் உனக்குள்ளே ஏகமாய்த் தேர்ந்து*
*வெட்ட வெளியினைச் சாய்ந்து - ஆனந்த*
*வெள்ளத்தில் மூழ்கி மிகுகளி கூர்ந்து* 22

விளக்கம் - எட்டு என்ற எண்ணைத் தமிழில் எழுதும் போது அ என்று எழுதுவர். இரண்டு என்ற எண்ணை எழுதும் போது உ என்று எழுதுவர். அ என்பது அகரத்தைக் குறிக்கும். உ என்பது உகரத்தைக் குறிக்கும். சிவன் சக்தி என இரண்டு என்றும் கூறுவர். நான்மறை கூறும் இவற்றை ஆராய்ந்து பரவெளியை நாடி பேரானந்த வெள்ளத்தில் மூழ்கி மிக்க மகிழ்ச்சி கொள்ளலாம்.

*இந்த உலகமும் உள்ளும் - சற்றும்*
*இச்சைவை யாமலே எந்நாளும் தள்ளு*
*செந்தேன் வெள்ளம் அதைமொள்ளு - உன்றன்*
*சிந்தை தித்திக்கத் தெவிட்ட உள்கொள்ளு* 23

விளக்கம் - இந்த உலகம் நினைத்தவற்றின் மேல் கொஞ்சமும் இச்சை வையாதே. அவற்றை எந்த நாளும் நீக்குக. பேரின்ப வெள்ளமாகிய செந்தேனை எடுத்துக் கொள். உன்னுடைய மனம் இனிமையுறத் தெவிட்டாமல் உட்கொள்க. எதற்கும் ஆசைப்படாதே. பேரின்ப வழியின் மேல் இச்சை கொள்.

*பொய்வேதம் தன்னைப் பாராதே - அந்தப்*
*போதகர் சொற்புத்தி போதவா ராதே*
*மைவிழி யாரைச் சாராதே - துன்*
*மார்க்கர்கள் கூட்டத்தில் மகிழ்ந்து சேராதே* 24

விளக்கம் - பொய்மையான வேத நெறிகளைப் பாராதே. அதைப் போதிக்கும் போதகர் சொல்லும் புத்திமதிகளைக் கேளாதே. மை பூசிய விழியுடைய மாதரைச் சேராதே. கெட்ட வழி செல்வார் கூட்டத்தில் மகிழ்ந்து சேராதே.

*வைதோரைக் கூடவை யாதே - இந்த*
*வையம் முழுதும் பொய்த்தாலும் - பொய்யாதே*
*வெய்ய வினைகள் செய்யாதே - கல்லை*
*வீணில் பறவைகள் மீதில் எய்யாதே* 25

விளக்கம் - உன்னை யார் வைதாலும் நீ அவரை வையாதே. இந்த உலகம் முழுவதும் பொய்த்தாலும் நீ பொய்யாதே. தீமை தரும் வினைகளைச் செய்யாதே. கல்லை எடுத்து வீணாகப் பறவைகள் மேல் எறியாதே.

*சிவம் அன்றி வேறே வேண்டாதே - யார்க்கும்*
*தீங்கான சண்டையைச் சிறக்கத் தூண்டாதே*
*தவநிலை விட்டுத் தாண்டாதே - நல்ல*
*சன்மார்க்கம் இல்லாத நூலை வேண்டாதே* 26

விளக்கம் - சிவத்தைத் தவிர வேறு எதையும் வேண்டாதே. எவரிடத்தும் சண்டையைத் தூண்டாதே. தவம் செய்யும் நிலையை விட்டுத் தாண்டாதே. நல்ல சன்மார்க்கம் தராத நூலை விரும்பாதே.

*பாம்பினைப் பற்றி ஆட்டாதே - உன்றன்*
*பத்தினி மார்களைப் பழித்துக் காட்டாதே*
*வேம்பினை உலகில் ஊட்டாதே - உன்றன்*
*வீறாப்பு தன்னை விளங்க நாட்டாதே* 27

விளக்கம் - பாம்பினைப் பற்றி ஆட்டாதே. (அரவம் ஆட்டேல் என்பது ஒரு பழ மொழி) உங்கள் மனைவிமார்களைப் பழிக்காதீர். உலகில் பிறர்பால் வெம்பினைப்போல் கசப்பான சொற்களைப் பேசாதீர். பிறரிடம் வீறாப்பைக் காட்டாதீர்.

*போற்றும் சடங்கை நண்ணாதே - உன்னைப்*
*புகழ்ந்து பலரில் புகல ஒண்ணாதே*
*சாற்றும்உன் வாழ்வை எண்ணாதே - பிறர்*
*தாழும் படிக்குநீ தாழ்வைப் பண்ணாதே*

விளக்கம் - போற்றுவதற்காகச் செய்யும் சடங்கினை விரும்பாதீர். உன்னைப் புகழ்ந்து பலர்முன் உரையாதே. உன் சுக வாழ்வை எண்ணாதே. பிறரைத் தாழச் செய்வதற்காக நீ தாழ்வான செயல்களைப் பண்ணாதே.

*கஞ்சாப் புகைபிடி யாதே - வெறி*
*காட்டி மயங்கியேகள் குடியாதே*
*அஞ்ச உயிர்மடி யாதே - பத்தி*
*அற்றஅஞ் ஞானத்தின் நூல்படி யாதே* 28

விளக்கம் - கஞ்சாவினால் வரும் புகையைப் பிடியாதே. வெறியை உண்டாக்கும் கள்ளைக் குடியாதே. அஞ்சாது அதனால் மடியாதே. பத்தி இல்லாத அஞ்ஞானம் தரும் நூலைப் படியாதே.

*பத்திஎனும் ஏணி நாட்டித் - தொந்து*
*பந்தம்அற்ற இடம்பார்த்(து) அதைநீட்டிச்*
*சத்தியம் ஒன்(று) அதை ஈட்டி - நாளும்*
*தன்வசம் ஆக்கிக் கொள்சமயங்கள் ஓட்டி* 29

விளக்கம் - பக்தி என்னும் ஏணியை நாட்டிச் சொந்த பந்தம் இல்லாத இடத்தை நோக்கி மேற்படி பக்தியை வளர்த்துச் சத்தியம் என்ற ஒன்றைப் பெற்று அதனை நாளும் தன்வசம் ஆக்கிக்கொள். அப்போது சமயங்களைப் பற்றிய கருத்துக்களை நீக்கிவிடு.

*செப்பரும் பலவித மோகம் - எல்லாம்*
*சீஎன்(று) ஒறுத்துத் திடங்கொள் விவேகம்*
*ஒப்பரும் அட்டாங்க யோகம் - நன்றாய்*
*ஓர்ந்(து) அறி வாய் அவற்றுண்மை சம்போகம்* 30

விளக்கம் - சொல்ல அரிதான பலவிதமான மோகங்களை எல்லாம் சீ என்று ஒதுக்கித் தள்ளித் திடமான அதாவது உறுதியான அறிவைப் பெறு. ஒப்புமை சொல்ல இயலாத அட்டாங்க யோகம் என்னும் எட்டுவகை யோகங்களை நன்றாக ஆராய்ந்து அவற்றின் உண்மை நிலையை அறிந்து கொள்க.

அட்டாங்க யோகம் - இயமம் - நியமம் - ஆதனம் - பிராணாயாமம் - பிரத்தியாகாரம் - தாரணை - தியானம் - சமாதி
இயமம் - கொல்லாமை - பொய் கூறாமை முதலியன
நியமம் - புலனடக்கித் தவம் செய்தல்
ஆதனம் - ஆதனம் எட்டுவகை - பத்மாசனம் முதலாக வருவன
பிராணாயாமம் - கீழிருக்கும் குண்டலினி சக்தியை மேலே எழுப்பி ஆறாதாரங்களின் வழியாக ஆயிரம் இதழ்த்தாமரையாகிய தலை உச்சியில் ஏற்றுதல்.

தாரணை - ஐம்பூதங்களானவற்றைச் சுவை ஒளி ஊறு ஓசை நாற்றம் என்ற ஐந்தில் அடக்கி அவற்றை மனம் புத்தி சித்தம் அகங்காரம் என்ற கரணங்கள் ஒடுக்குதல் தாரணை. தியானம் - ஒளி வடிவாக இருக்கும்

சக்தியையும் சிவத்தையும் தியானித்தல் தியானம். சமாதி – இயமம் நியமம் முதலான எட்டுப் படிகளிலும் தவறாமல் நிற்பவர்க்கே சமாதி நிலை கிட்டும்.

*எவ்வகை யாக நல்நீதி – அவை*
*எல்லாம் அறிந்தே எடுத்துநீ போதி*
*ஒவ்வா வென்ற பலசாதி – யாவும்*
*ஒன்(று) என்(று) அறிந்தே உணர்ந்துற ஓதி* 31

விளக்கம் – எந்த வகையாலும் நல்ல நீதி நெறிகளை அறிந்து அவற்றைப் பிறருக்குப் போதி. சாதிகள் பல எனினும் அவை எல்லாம் ஒன்றே என்று பிறர் உணருமாறு ஓது.

*கள்ள வேடம் புனையாது – பல*
*கங்கையிலே உன் கடம்நனையாதே*
*கொள்ளை கொள்ள நினையாதே – நட்புக்*
*கொண்டு புரிந்துநீ கோள் முனையாதே* 32

விளக்கம் – கள்ளத் தனமான வேடம் தரிக்காது கங்கை போன்ற பல புண்ணிய தீர்த்தங்களில் உன் கடனைத் தீர்க்க நனையாதே. எதையும் கொள்ளை கொள்ள நினைக்காதே. பிறர்பால் நட்புக் கொண்டு அவரைப்பற்றிக் கோள் சொல்லாதே.

*எங்கும் சுயபிர காசன் – அன்பர்*
*இன்ப இருதயத்(து) இருந்திடும் வாசன்*
*துங்க அடியவர் தாசன் – தன்னைத்*
*துதிக்கில் பதவி அருளுவான் ஈசன்* 33

விளக்கம் – எங்கும் ஒளி வடிவாய் இருக்கும் ஈசன் நம் இதயத்தில் வாசம் செய்பவன். சிறந்த அடியவர்க்கு அவன் அடியவன். அவனைத் துதித்தால் நற்கதி அருள்வான்.

*(தொடரும்...)*



# பட்டினத்தார் பைந்தமிழ் - 24

தமிழாகரர் தெ. முருகசாமி
(மேனாள் முதல்வர் - இராமசாமி தமிழ்க் கல்லூரி, காரைக்குடி)

நாடும் நகரமும் நற்றிருக் கோயிலும்
தேடித் திரிந்து சிவபெரு மான்என்று
பாடுமின் பாடிப் பணிமின் பணிந்த பின்
கூடிய நெஞ்சத்துக் கோயிலாக் கொள்வனே. (1445) என்பது திருமூலர் வாக்கு. ஊர், நகர், நாடு, உலகு எனச் சுற்றித் திரிந்து வழிபாடு செய்வ தென்பது அருளியல் பெறவே ஆகும். இங்ஙனம் போய் வருவதைத் திருத்தலப் பயணம் என்பர், இதனைத் தலயாத்திரை என்பதாகவும் கூறுவர்.

இத்தகு பயணத்தில் ஆங்காங்கே சென்று இறை நம்பிக்கையுடன் இறைத் திருநாமங்களைச் செப்பி வழிபட வேண்டும். அவ்வத் தலங்களின் சிறப்புகளைக் காதாரக் கேட்டு மகிழ வேண்டும், இதனால் இத்தலயாத்திரை இறை சிந்தனையாகவே இருக்கும்.

இந்த நிலையில்தான் அருளாளர்கள் தலங்கள் தோறும் சென்று இறைவனை வணங்கி வழிபட்டதோடு அருளார்ந்த பாடல் களைப்பாடியும் மகிழ்ந்தனர். அந்த வகையில் பட்டினத்தார் கொண்ட தலயாத்திரையில் தில்லைக்குப் பிறகு திருச் செங்காட்டன்குடி என்னும் ஊருக்குச் சென்று வழிபடுகையில் கீழ்க்கண்டவாறு பாடுகிறார்.

*நெருப்பான மேனியர் செங்காட்டில்*
*ஆத்தி நிழலருகே*
*இருப்பார் திருவுளம் எப்படியோ?*
*இன்னம் என்னையன்னைக்*
*கருப்பா சயக்குழிக்கே தள்ளுமோ?*
*கண்ணன் காணரிய*
*திருப்பாத மேதரு மோதெரி*
*யாது சிவன் செயலே!*

திருச்செங்காட்டில் ஆத்தி மரத்தடியில் வீற்றிருக்கும் சிவபெருமானது சித்தம் என் அளவில் எப்படி உள்ளதோ! எனப் பட்டினத்தார் மயங்குகிறார். ஏனனில் தன்னை மீண்டும் பிறக்க வைப்பானோ? அல்லது திருவடிப்பேறு தந்து உய்விப்பானோ? என ஏங்குகிறார்.

இங்ஙனம் தடுமாறுதற்குத் திருச்செங்காட்டன் குடியின் புராணக் கதை நிகழ்வே காரணமாகும். சிறுத் தொண்டர் பிள்ளைக்கறியைச் சிவனுக்கு அர்ப்பணம் செய்த ஊர் என்பதால் தம்மை மீண்டும் பிறவிக் குழியில் தள்ளிப் பலியிடுவதற்கேற்பப் பல பிறப்பைத் தருவாரோ! எனப் பட்டினத்தார் ஐயப்படுகிறார். அவரே வாளால் மகவரிந்து ஊட்டவல்லேன் அல்லேன் எனத்தம் இயலாமையைக் குறிப்பதால் மரணமிலாப் பெறுவாழ்வாகத் திருவடிப் பேறுகிட்டுமோ என ஏங்குகிறார்.

இவ்வாறான ஏக்கம் ஆன்மாவுக்கு இருந்தால் தான் ஒரு நிலைப்பட்ட உணர்வோடே உய்திபெற முடியும் என்பதற்குச் செங்காட்டன் குடிச் சம்பவமே அகச் சான்றாகும்.

பிள்ளைப் பாசம் இல்லாமல் தாய் தந்தை இரு வரும் அடியார்க்கு உணவிடுதல் என்ற ஒரே உணர்வுடன் தம் பிள்ளையை அரிந்து கறி சமைத்தல் என்பது செயற்கருஞ் செயல் என்பதால் மன அடக்கம் புலன் அடக்கம் உள்ள வழிபாடே வழிபாடு என்பதை இப்பாடல் குறிப்பாகச் சுட்டுகிறது.

அடுத்து திருவொற்றியூர்க்குத் தலப் பயணம் மேற் கொள்கிறார் பட்டினத்தார். அவ்வூரின் மீது ஒருபா ஒருபஃது என்ற தலைப்பில் பதிகமாகப் பத்துப் பாடல்களைப் பாடியுள்ளார். அது 11ஆம் திருமுறையில் சேர்க்கப்பட்டுள்ளது. எனினும் ஈண்டு யாத்திரையாகக் குறித்த இருபாடல்கள் அடிகளின் உள்ளக்கிடக்கையான வேண்டுதலாக ஒன்றும் மனத்தைக் குறித்துக் கூறுவதாக ஒன்றுமாகப் பாடப்பட்டுள்ளன.

ஒற்றியூருடையீர்! சாங்காலத்து விழி செருகி அறிவு அழிந்து நினைப்பு தப்பிவிடும் என்பதால் அவற்றிற்கு முன்பாக எனக்கு, திருநீறும் இட்டுக் கையும் தொழப்பண்ணி ஐந்தெழுத்து ஓதவும் கற்பியுமே! என வேண்டுகிறார்.

அடுத்து - திருவொற்றியூரின் தெருவில் நடக்கும் அடியார்களின் திருவடிகள் தம் தலையில் பட்டால் பிரமன் எழுதிய தலையெழுத்து கலைந்து விடும் எனத்தம் மனத்திற்குக் கூறுவதாய் அடியார்களின் திருவடியைத் தொழ ஆசைப்படுகிறார். இதனால் பட்டினத்தார்

உணர்த்துவது யாதெனில் திருவொற்றியூர்த் திருக்கோயில் தெருவில் நடப்பவரே பெரும் புண்ணியத்துக் குரியர் என்பதால் அத்தகையோர் திருவடி நம் தலையில் பட்டாலே பிறவிப் பிணி நீங்கும் என்பது கருத்து!

ஒற்றியூரிலிருந்து திருவிடை மருதூர்க்குச் சென்ற பட்டினத்தார், துறவறங் கொள்வதாலும் சடங்குகளை மேற் கொள்வதாலும் உள்ளத்தில் அன்பில்லையானால் அவற்றால் பயனில்லை என்பதால் உலகியல் வாழ்வாக இல்லறத்திலிருந்து கொண்டே திருவிடைமருதூர் ஈசனுக்கு மெய்யன்புடையவரே வீடுபேறடைவர் என்றார். ஆதலால் கையிலுள்ள செல்வம் நீங்கி விட்டால் எல்லாரும் பகையாகிவிடுவர் என்பதால் இடை மருதூர் ஈசன் திருவடியே செல்வமும் துணையும் ஆகும் என்கிறார். இத்திருத்தலப் பாடலில் தாம் பெற்றிருந்த அழியும் செல்வங்களின் அனுபவங்களை நினைந்து அழியாச் செல்வத்தை அடைய மக்களுக்கு அறிவுறுத்தினார் எனலாம்.

அடுத்துத் திருக் கழுக்குன்றத்தைப் பாடும் பட்டினத்தார், பிறப்புண்டேல் இறப்புண்டு என்ற படியான நியதி இருந்தாலும் அந்த இறப்பு எந்த இடத்திலும் நிகழக் கூடும்; அங்ஙனம் நிகழுங்கால் இறப்பாலான உடம்பு அநாதியாகி விடும் இழி நிலை வாராதவாறு கழுக்குன்ற ஈசா! நின்பாதமே தமக்கு உயிர்த்துணை என்கிறார். இதனால் யாரும் பழிக்காத இறப்பாய் இறைபதம் அடைவதை நிச்சயித்துக் கொண்டார் என்பது கருத்து. இந்த அறிவுறுத்தலின் சாயலாகவே பட்டினத்தாரைப் போலச் சைவ எல்லப்ப நாவலர் என்பார் நால்வர் பொற்றாள் எம் உயிர்த் துணையே என்றார்.

பட்டினத்தார்க்குப் பிற சிவத்தலங்கள் தம் உடலின் கைகால் போன்ற உறுப்புகளாக இருந்தாலும் இதயமாக உள்ள திருத்தலம் திருக்காளத்தியே எனலாம். காளம் - விடமுடைய பாம்பு; அத்தி - யானை. இரண்டும் பூசித்துப் பேறு பெற்ற தலம் என்பதால் பக்தர்கள் தம் தோஷம் கழிக்கும் தலமாக இதனைப் பெரிதும் கொண்டாடுவர்.

இக்காளத்திக்கு ஆறு பாடல்கள் பாடப்பட்டுள்ளன. செத்தாரைச் சாவார் சுமந்து என்பது போல நிலையாமையைப் பற்றிய முதற்பாடலில் பட்டினத்தார் கூறுகையில்,

**செத்துக் கிடக்கும் பிணத்தருகே யினிச் சாம்பிணங்கள்**

கத்தும் கணக்கென்ன காண்கயி லாபுரிக் காளத்தியே! என்றார். அடுத்த தொரு பாடலில் ஒரு கூட்டு வாணிபத்தை இறைவனோடு கொள்வார் போலப் பாடுகிறார்.

காளத்தியாரே! தங்கத்தைப் பெற்றவர்க்குத் தங்கத்தால் பயனுண்டு; ஆனால் தங்கத்திற்கு யாதொரு பயனும் இல்லாதது போல உன்னைப் பெற்ற எனக்கு உன்னால் பயன் உண்டு, ஆனால் அடியேனால் தேவரீருக்கு ஆக வேண்டிய பயன் இல்லையே! என்பதால் உன்னை அனுபவிக்கும் அருள்தா என்கிறார் பட்டினத்தார்.

அடுத்து - சிறுத்தொண்டர், திருநீலகண்டர், கண்ணப்பர் என்ற மூவரின் செயற்கரும் செயலைப் பாராட்டி அவர்களைப் போலத் தொண்டு செய்யாமல் இறைவனுக்கு ஆளாவது எப்படி என ஏங்குகிறார், உருக்கமாகப் பாடும் இப்பாடலில் தொண்டின் திறம் அடுக்கடுக்காகக் கூறிய நயத்தால் விளங்குகிறது.

தாய் தந்தை மகன் எனக் குடும்பமே தொண்டுக் குரியவராவது சிறுத்தொண்டர் வரலாறாகும். கணவன் மனைவி இருவராய்த் தொண்டு செய்தலைத் திருநீலகண்டர் வரலாறு சுட்டும். கண்ணப்பர் குடும்பத்தின் ஒரே வாரிசாக இருந்தும் தொண்டாற்றுதலைக் குறிக்கிறார். ஆக எந்நிலையிலேனும் கைத்திருத் தொண்டு செய்தலே தகும் என்பதைப் பட்டினத்தார் அறிவுறுத்தினார் என்பதே வாளால் மகவரிந்து ஊட்டவல்லேன் அல்லன் என்ற புகழ் பெற்ற பாடலின் கருத்தாகும்.

மேலும் அடுத்த தொருபாடலில் எப்போதும் அலைந்து திரியும் வாழ்க்கையிலேயே காலத்தைப் போக்கும் நான், காளத்தி வந்து காணும் காலம் எனக்கு எப்போது வாய்க்கும் என ஏங்குவதாகப் பாடுகையில் எப்போது காணவல் லேன் திருக்காளத்தி யீசுரனே! என்றார். இன்னுமொரு பாடலில் அல்லும் பகலும் இரைக்கே அலையும் நான் இறையைத் தேட வாய்ப்பில்லாமல் இருக்கும் எனக்கு கல்லால நிழற்கீழ் அமர்ந்தருள் காளத்தியே! தமியேனை யாண்டருள் செய் என்கிறார்.

இறுதியாகப் பாடும் பாடலில் சிற்றின்பம் நீக்கிப் பேரின்பம் தருவாய் எனப் பாடுகையில் சிற்றின்பம் விட்டு ஏறும் பதம் தருவாய்

திருக்காளத்தி யீசுரனே என்கிறார். ஆக பட்டினத்தார்க்குக் காளத்தியாரிடம் கொண்ட பற்று அளப்பரியது எனத் தெரிகிறது.

தென் கயிலாயம் எனப்படும் திருக் காளத்தியைப் பாடிப்பரவிய பட்டினத்தார் வடகயிலாயம் என்றழைக்கப்படும் திருக்கைலாயத்தைப் பாடிப் பரவுகிறார். எல்லாப் பாடல்களும் வேண்டுதல் களாகவே உள்ளன. 1. ஊன் சாயும் சென்மம் ஒழித்திடுவாய் என மாமிசப் பிண்டமான உடலைத் தாங்கும் பிறவியை ஒழிக்க வேண்டுகிறார். 2. சுகானந்தத் தூக்கத்தில் இருப்பது என்றோ? என்கிறார். சுகானந்தத் தூக்கம் என்பது ஞானானந்தமான யோக தூக்கத்தில் தூங்குவதைப் பட்டினத்தார் வேண்டுவது சிறப்பாக உள்ளது. 3. ஞானத் தூக்கத்தைப் போலச் சிவானந்த தூக்கத்தில் இருப்பது எப்போது! என வினவுகிறார். 4. ஐயா! நிற்பணிந்து ஓலமிடுவது எப்போ! என்கிறார். 5. தியானம் முற்றி ஆனந்தக் கண்ணீர் பெருகக் கிடப்பது எப்போ என்கிறார். 6. பொருட் செல்வரை நாடி அவமானப்படுவதினும் அருட் செல்வராம் கயிலாயச் சிவக் கொழுந்தைக் காந்தமெனப் பற்றுவது எந்நாளோ? என ஏங்குகிறார். ஏழாவது பாடல் நல்லதோர் உவமைச் சிறப்பானதாகும்.

*மந்திக் குருளை ஒத்தேன்*
*இல்லை, நாயேன்! வழக்கறிந்தும்*
*சிந்திக்கும் சிந்தையை யான்என்*
*செய்வேன், எனைத்தீ தகற்றிப்*
*புந்திப் பரவில் குருளையை*
*ஏந்திய பூசை யைப்போல்*
*எந்தைக் குரிய வன்காண்*
*அத்தனே! கயிலா யத்தனே!*

கயிலாயத்தவனே! நான் குரங்குக் குட்டியைப் போன்றவன் அல்லன், அதாவது தாய்க் குரங்கு தனது குட்டியைத் தூக்கிச் செல்லாது குட்டிதான் தாயை விடாமல் பற்றிக் கொள்ளும். அதுபோல் நான் உன்னைப் பற்றிக் கொள்ளாமல் உள்ளேன். ஆதலால் பூனையானது தனது குட்டியைக் கவ்விக் கொண்டே போவது போல் கயிலாயத்தவனே! நீ தான் என்னை ஆட்கொள்ள வேண்டும் என்கிறார் பட்டினத்தார். இந்த அமைப்பை மர்க்கட நியாயம், மார்ச்சல நியாயம் என்பர். இதனால் சிவனருளே தன்னைத் தாங்க வேண்டும் என்கிறார் என்பது கருத்து.

8. இறுதியாகக் கயிலாயவாசனை வேண்டுகையில், உனதருளால் அடியார் கூட்டத்துடன் என்னை இணைத்துக் கொண்டதால் உனது பஞ்சாட்ரத்தை ஓதி உய்வேன் என்று உறுதி கூறுகிறார்.

இங்ஙனமாகப் பட்டினத்தார் திருத்தலப் பயணமாகப் பலதலங்களைச் சென்று வணங்கும் தொடர்ச்சியில் இறுதியாக மதுரையம் பதிக்குச் சென்று சொக்கநாதா! சவுந்தர பாண்டியனே! அற்பர் வாயிலிற் சென்று கண்ணீர்ததும் பும்படியாசிக்கப் படுமோ! நான் என்கிறார் இதனால் இப்பிரபஞ்ச வாழ்க்கையை விட்டு மனம் திடப்படுமாறு அருள வேண்டுகிறார் பட்டினத்தார்.

இப்படியாகத் தலயாத்திரையில் இறையருள் கூட வேண்டிப் பட்டினத்தார் யாசித்தது போல நாம் யாசிக்க வேண்டுமேயன்றி வெறுமனே ஊரைக் கண்டு வரும் சுற்றுலா வாகத் தலயாத்திரையைப் பயன்படுத்தக் கூடாது என்ற பாடத்தையே பட்டினத்தார் பாடல்கள் உணர்த்துகின்றன என உணர்தல் வேண்டும் என்பதாம்!

இனி ஊர் பற்றியதாக இல்லாமல் பொதுமைப் பட உள்ள கருத்துக்களைப் பொது என்ற தலைப்பின் கீழ் பாடியுள்ளதன் கருத்தை அறிவோமாக!

*(தொடரும்...)*

## திருக்குறள் தெளிவுரை

(ம. கார்மேகம்)

### சிற்றினம் சேராமை

(பேரறிவு இல்லாத இனத்தைச் சேராதிருத்தல்)

1. **சிற்றினம் அஞ்சும் பெருமை சிறுமைதான்**
   **சுற்றமாச் சூழ்ந்து விடும்.**

சிற்றினம் அஞ்சும் – அறிவில்லாதவரை அஞ்சுவார்கள்; பெருமை – பேரறிவுடையோர்; சிறுமை தான் – அறிவில்லாச் சிறியோர்; சுற்றமாச் சூழ்ந்துவிடும் – தமக்குள் சுற்றமாக எண்ணிச் சூழ்ந்து கொண்டுவிடுவர்.

பேரறிவுடையோர் அறிவில்லாதவரைக் கண்டு அஞ்சுவார்கள்; ஆனால் அறிவில்லாச் சிறியோர் தமக்குள் சுற்றமாகச் சூழ்ந்து கொண்டுவிடுவர்.

பெருமை, சிறுமை – பண்புப் பெயர்கள்.

**2. நிலத்துஇயல்பான் நீர்திரிந்து அற்றாகும் மாந்தர்க்கு
இனத்தியல்பது ஆகும் அறிவு.**

நிலத்துஇயல்பான் - நிலத்தினது இயல்பினால்; நீர்திரிந்து - நீர் தன்னுடைய தன்மை மாறி; அற்றாகும் - நிலத்தின் தன்மையாகிய நிறம், சுவையினைப் பெற்று விடும்; மாந்தர்க்கு - மாந்தருக்கும்; இனத்தியல்பது ஆகும் அறிவு - தாம் சேர்ந்த இனத்தின் இயல்பான அறிவே அமையும்.

நீர் தனது இயல்பான தன்மை மாறித்தான் சேர்ந்த நிலத்தின் நிறம், சுவை ஆகிய பண்பினைப் பெற்றுவிடும்; அதுபோல மாந்தருக்கும் தாம் சேர்ந்த இனத்தின் இயல்பான அறிவே அமையும்.

நிலத்தின் தன்மையால் நீர் மாறுவது போலத் தாம் சேர்ந்த இனத்தின் தன்மையால் அந்த இனத்தைப் போலவே அறிவும் அமையும்.

**3. மனத்தான்ஆம் மாந்தர்க்கு உணர்ச்சி இனத்தான் ஆம்
இன்னான் எனப்படும் சொல்.**

மனத்தான் ஆம் மாந்தர்க்கு உணர்ச்சி - மனிதனின் உணர்ச்சி அவன்தன் மனத்தினால் உண்டாகும்; இனத்தான் ஆம் இன்னான் எனப்படும் சொல் - அவன் சேர்ந்த இனத்தினால் அவன் இன்ன தன்மையன் என்று குறிக்கும் சொல் உண்டாகும்.

மனிதனின் உணர்ச்சி அவன் தன் மனத்தால் உண்டாகும். அவன் இன்ன தன்மையான் என்று குறிக்கும் சொல் அவன் சார்ந்த இனத்தினால் உண்டாகும்.

ஆம் - ஆகும் என்பதன் இடைக்குறை.

**4. மனத்துளது போலக் காட்டி ஒருவற்கு
இனத்துளது ஆகும் அறிவு.**

அறிவு - உணர்வு; மனத்துளது போலக் காட்டி - ஒருவனது மனத்தில் உள்ளது போலக் காட்டி; ஒருவற்கு - ஒருவனுக்கு; இனத்துளது ஆகும் - அவன் சேர்ந்த இனத்தின்கண் உள்ளது போல ஆகும்;

அறிவு ஒருவனது மனத்தில் உள்ளது போலக் காட்டும்; ஆனால் அது அவன் சேர்ந்த இனத்தில் உள்ள அறிவு போல் ஆகும்.

**5. மனம் தூய்மை செய்வினை தூய்மை இரண்டும்**
**இனம் தூய்மை தூவா வரும்.**

மனம் தூய்மை - ஒருவன் மனம் தூயவனாதலும்; செய்வினை தூய்மை - செய்யும் செயலில் தூயவனாதலும்; இரண்டும் - இவ்விரண்டும்; இனம் தூய்மை - அவன் சேர்ந்த இனத்தின் தூய்மை என்னும்; தூவா வரும் - பற்றுக் கோடால் அமையும்.

ஒருவன் மனம் தூயவனாதலும் அவன் செய்யும் செயலில் தூயவனாதலும் ஆகிய இரண்டும் அவன் சேர்ந்த இனத்தின் தூய்மை என்னும் பற்றுக் கோடால் அமையும்.

தூவா - தூவாக என்பதன் கடைக்குறை.

**6. மனம் தூயார்க்கு எச்சம்நன்று ஆகும் இனம் தூயார்க்கு**
**இல்லை நன்று ஆகா வினை.**

மனம் தூயார்க்கு - மனம் தூயவரானவர்க்கு; எச்சம் நன்று ஆகும் - மக்கட் செல்வம் நல்லதாகக் கிடைக்கும்; இனம் தூயார்க்கு - தூய இனத்தைச் சார்ந்த தூயவர்க்கு; நன்று ஆகாவினை இல்லை - நன்று ஆகாத செயல் எதுவும் இல்லை.

மனம் தூயவரானவர்க்கு மக்கட்செல்வம் நல்லதாகக் கிடைக்கும்; தூய இனத்தைச் சார்ந்த தூயவர்க்கு நன்று ஆகாத செயல் எதுவும் இல்லை. நன்மையே விளையும் என்பது கருத்து.

ஆகா - ஈறு கெட்ட எதிர்மறைப் பெயரெச்சம்

இல்லை - குறிப்பு வினைமுற்று.

**7. மனநலம் மன்உயிர்க்கு ஆக்கம் இனநலம்**
**எல்லாப் புகழும் தரும்.**

மனநலம் - மனத்தின் நன்மை; மன் உயிர்க்கு - நிலை பெற்ற உயிர்க்கு; ஆக்கம் - செல்வம் தரும்; இனநலம் - தான் சேர்ந்த இனத்தின் நன்மை; எல்லாப் புகழும் தரும் - எல்லாப் புகழையும் தரும்.

மனத்தின் நன்மை நிலைபெற்ற உயிர்க்குச் செல்வம் தரும்; தான் சேர்ந்த இனத்தின் நன்மை எல்லாப் புகழையும் தரும்.

தரும் என்னும் சொல்லை ஆக்கம் என்பதோடு கூட்டிப் பொருள் கொள்ளப் பெற்றது.

புகழும் - உம் இறந்தது தழீஇய எச்ச உம்மை

8. மனநலம் நன்குடையர் ஆயினும் சான்றோர்க்கு
இனநலம் ஏமாப்பு உடைத்து.

மனநலம் நன்கு உடையர் ஆயினும் - மனத்தின் நன்மையை நல்ல வகையில் உடையவர் ஆனாலும்; சான்றோர்க்கு - சான்றாண்மை கொண்டோருக்கு; இன நலம் - அவர் சார்ந்த இனத்தின் நன்மை; ஏமாப்பு உடைத்து - வலிமை உடையதாகும்.

மனத்தின் நன்மை நல்ல வகையில் உடைய சான்றோருக்கு இனத்தின் நன்மை வலிமை உடையதாகும்.

9. மனநலத்தின் ஆகும் மறுமைமற்று அஃதும்
இனநலத்தின் ஏமாப்பு உடைத்து.

மனநலத்தின் ஆகும் மறுமை - ஒருவனுக்கு மன நன்மையினால் தான் மறுமை உண்டாகும்; மற்று அஃதும் - அதுவும் கூட; இனநலத்தின் ஏமாப்பு உடைத்து - தான் சேர்ந்த இனத்தின் நன்மையால் தான் வலிமை பெறும்.

ஒருவனுக்கு மன நன்மையால் தான் மறுமை உண்டாகும்; அதுவும் கூடத் தான் சேர்ந்த இனத்தின் நன்மையால் தான் வலிமை பெறும்.

மற்று - வினை மாற்று.

10. நல்லினத்தின் ஊங்கும் துணைஇல்லை தீயினத்தின்
அல்லல் படுப்பதூஉம் இல்.

நல்லினத்தின் ஊங்கும் துணைஇல்லை - ஒருவனுக்கு நல்லினத் தாரைவிடச் சிறந்த துணை இல்லை; தீயினத்தின் - தீய இனத்தாரை விட; அல்லல்படுப் பதூஉம் இல் - துன்பம் தரவல்லது வேறு இல்லை.

ஒருவனுக்கு நல்லினத் தாரைவிடச் சிறந்த துணை இல்லை; தீய இனத்தாரைவிடத் துன்பம் தரவல்லது வேறு இல்லை.

## தெரிந்து செயல்வகை

(செய்யும் செயல்களை ஆராய்ந்து செய்யும் வகை)

1. அழிவதூஉம் ஆவதூஉம் ஆகி வழிபயக்கும்
ஊதியமும் சூழ்ந்து செயல்.

அழிவதூஉம் - செயல் மேற்கொண்டு செய்யும் போது அதனால் வரும் அழிவினையும்; ஆவதூஉம் - அதனால் வரும் ஆக்கத்தையும்;

வழிபயக்கும் ஊதியமும் - அதன் வழி கிடைக்கும் ஊதியத்தையும்; சூழ்ந்து செயல் - ஆராய்ந்து செய்ய வேண்டும்.

ஒரு செயலைச் செய்யும் போது அதனால் வரும் அழிவினையும் அதனால் வரும் ஆக்கத்தையும் அதன் வழி கிடைக்கும் ஊதியத்தையும் ஆராய்ந்து செய்ய வேண்டும்.

அழிவதூஉம், ஆவதூஉம் - இன்னிசை அளபெடை

உம் - எண்ணும்மை

செயல் - வியங்கோள் வினைமுற்று

**2. தெரிந்த இனத்தோடு தேர்ந்துஎண்ணிச் செய்வார்க்கு**
**அரும்பொருள் யாதொன்றும் இல்.**

தெரிந்த இனத்தோடு - தான் தேர்ந்து கொண்ட இனத்தோடு; தேர்ந்து எண்ணிச் செய்வார்க்கு - செய்யத்தக்கதை ஆராய்ந்து செய்பவர்களுக்கு; அரும் பொருள் யாதென்றும் இல் - கிடைத்தற்கரிய பொருள் என்று எதுவும் இல்லை.

தான் தேர்ந்து கொண்ட இனத்தோடு செய்யத்தக்கதை ஆராய்ந்து செய்பவர்களுக்குக் கிடைத்தற்கரிய பொருள் என்று எதுவும் இல்லை. எல்லாமும் கிடைக்கும் என்பது கருத்து.

யாதொன்றும் - முற்றும்மை.

**3. ஆக்கம் கருதி முதல் இழக்கும் செய்வினை**
**ஊக்கார் அறிவுடை யார்.**

ஆக்கம் கருதி - கிடைக்க உள்ள செல்வத்தைக் கருதி; முதல் இழக்கும் செய்வினை - முதலாக உள்ளபொருளை இழப்பது போன்ற செயலை; ஊக்கார் அறிவுடையார் - அறிவுடையவர்கள் மேற்கொள்ள மாட்டார்கள்.

கிடைக்கும் செல்வத்தைக் கருதி அதற்கான முதலை இழப்பது போன்ற செயலினை அறிவுடையவர்கள் மேற்கொள்ள மாட்டார்கள்.

செய்வினை - வினைத்தொகை.

கருதி - வினை எச்சம்; இழக்கும் - பெயரெச்சம்.

**4. தெளிவு இலதனைத் தொடங்கார் இளிவுஎன்னும்**
**ஏதப்பாடு அஞ்சு பவர்.**

தெளிவு இலதனை - ஆராய்ந்து தெளிவு இல்லாத செயலை; தொடங்கார் - தொடங்க மாட்டார்கள்; இளிவு என்னும் - இகழ்ச்சி என்னும்; ஏதப்பாடு அஞ்சுபவர் - குற்றத்திற்கு அஞ்சுகின்றவர்கள்.

இகழ்ச்சி என்னும் குற்றத்திற்கு அஞ்சுகின்றவர்கள் ஆராய்ந்து தெளிவு இல்லாத செயலைத் தொடங்க மாட்டார்கள்.

**5. வகை அறச் சூழாது எழுதல் பகைவரைப்**
**பாத்திப் படுப்பதோர் ஆறு.**

வகைஅறச் சூழாது எழுதல் - நிகழும் வகைகளை முற்றும் ஆராயாமல் படை எடுத்துச் செல்லுதல்; பகைவரை - பகைவர்களை; பாத்திப் படுப்பதோர் ஆறு - நிலத்தில் நிலைபெறச் செய்யும் நெறி போன்றதாகும்.

மேல் நிகழும் நிகழ்வுகளை முற்றும் ஆராயாமல் மன்னன் படை எடுத்துச் செல்லுதல் பகைவர்களைத் தம் நிலத்தில் நிலைபெறச் செய்வது போன்றதாகும்.

**6. செய்தக்க அல்ல செயக்கெடும் செய்தக்க**
**செய்யாமை யானும் கெடும்.**

செய்தக்க அல்ல - செய்வதற்குத் தக்கன அல்லாதவற்றை; செயக்கெடும் - செய்தால் கேடு உண்டாகும்; செய்தக்க - செய்வதற்குத் தக்கனவற்றை; செய்யாமையானும் கெடும் - செய்ய வில்லையானாலும் கேடு உண்டாகும்.

செய்யத் தகாதவற்றைச் செய்வதாலும் செய்யத் தக்கவற்றை செய்யவில்லையானாலும் கேடு உண்டாகும்.

**7. எண்ணித் துணிக கருமம் துணிந்தபின்**
**எண்ணுவம் என்பது இழுக்கு.**

எண்ணித் துணிக கருமம் - செய்யத்தக்க செயலை வழிமுறை அறிந்து எண்ணிப் பார்த்துத் தொடங்க வேண்டும்; துணிந்தபின் - தொடங்கிய பின்; எண்ணுவம் என்பது இழுக்கு - எண்ணிப் பார்ப்போம் என்று கருவது குற்றம் ஆகும்.

செய்யத்தக்க செயலை வழிமுறை அறிந்து எண்ணிப் பார்த்துத் தொடங்க வேண்டும்; தொடங்கியபின் எண்ணிப் பார்ப்போம் என்று கருதுவது குற்றம் ஆகும்.

**8. ஆற்றின் வருந்தா வருத்தம் பலர்நின்று
போற்றினும் பொத்துப் படும்.**

ஆற்றின் வருந்தா வருத்தம் - வழிமுறையால் ஒரு செயலைச் செய்ய முயலாத முயற்சி; பலர்நின்று போற்றினும் - துணையானவர் பலர் காக்க முற்பட்டாலும்; பொத்துப்படும் - குற்றம் உண்டாகும்.

வழிமுறையால் ஒருசெயலைச் செய்ய முயலாத முயற்சியைத் துணையானவர்கள் பலர்காக்க முற்பட்டாலும் குற்றமே உண்டாகும்.

**9. நன்று ஆற்றல் உள்ளும் தவறுண்டு அவரவர்
பண்பு அறிந்து ஆற்றாக் கடை.**

நன்று ஆற்றல் உள்ளும் - நன்மைகளைச் செய்வதிலும்; தவறுண்டு - குற்றம் உண்டாகும்; அவரவர் பண்பறிந்து - அவரவருடைய குணங்களை அறிந்து; ஆற்றாக்கடை - செய்யாத போது.

அவரவருடைய குணங்களை அறிந்து செய்யாத போது அவர்களுக்கு நன்மைகளைச் செய்வதிலும் குற்றம் உண்டாகும்.

**10. எள்ளாத எண்ணிச் செயல்வேண்டும் தம்மொடு
கொள்ளாத கொள்ளாது உலகு.**

எள்ளாத எண்ணிச் செயல் வேண்டும் - உலகம் இகழாத நிலையில் எண்ணிச் செயல்பட வேண்டும்; தம்மொடு கொள்ளாத - தம்மோடு பொருந்தாதவற்றை; கொள்ளாது உலகு - உலகம் ஏற்காது.

தம்மோடு பொருந்தாதவற்றை உலகம் ஏற்காது. எனவே உலகம் இகழாத நிலையில் எண்ணிச் செயல்பட வேண்டும்.

*(தொடரும்...)*

## திருவிளையாடற்புராணம் (தொடர்ச்சி)

### இரசவாதம் செய்தது

பாண்டிய வளநாட்டிலே, மதுரைமா நகருக்குக் கிழக்கே, வையை ஆற்றின் தென் கரையிலே திருப்பூவனம் என்ற சிவக்ஷேத்திரம் உண்டு. பூவணநாதப் பெருமான் திருக்கோவில் தொண்டர்களும், தாசிகளும் மற்றவர்கள் செய்த தவப்பயன் போல அவ்வூரில் பொன்னனையாள் என்ற பெண்மணி யொருத்தி தோன்றினாள். அவள் பெண்டிரில்

சிறந்தவள்; தேவரும் கண்டு மோகம் கொள்ளத்தக்க பேரழகு உடையவள்; அமுதச்சாயல் பெற்றவள். வீணை இசைப்பதிலே, இனிமையாகப் பாடுவதிலே, அருமையாக ஆடுவதிலே தேவமாதரை நிகர்த்திருந்தாள். அறநெறி தவறாமல் நடக்கும் தகுதி கொண்டவள். ஒவ்வொரு நாளும் விடிவதற்கு முன்னதாகவே தனது தோழிமார்களுடனே எழுந்து, வைகையாற்றிலே நீராடி சிவபூஜை செய்து, பின்பு திருக்கோவில் சேர்ந்து சிவ சன்னதி யடைந்து பூவணநாதரை வணங்குவாள். அங்கே தெய்வத் திரு முன் நாட்டியம் ஆடுவாள். சிவனடியார்களையே பெரும் பொருளாக மதித்து, அவர்களை வணங்கி, அவர்களை அறுசுவை உண்டி புசிக்கச் செய்வதையே தனது பெரும் கடமையாகக் கொண்டு பின்னர் தான் உணவு கொள்வதையே நியமமாகக் கொண்டு ஒழுகி வரலானாள்.

அத்தகைய நாட்களில் பொன்னனையாளின் பக்தியின் திறத்தை உலகுக்கு எடுத்துக்காட்ட வேண்டி, பூவண நாதர் தமது திருப்படிவத்தைப் புதிதாகப் பிரதிஷ்டை செய்யவேண்டுமென்ற எண்ணத்தை அவளுக்கு ஈந்தருளினார். அதே நற்கருத்தோடு பொன்னனையாள் இருந்துவந்தாள். ஆனால், தனக்கு அன்றன்று கிடைக்கும் பொருளை யெல்லாம் சிவனடியார் பூசைக்கே செலவழித்து வந்ததால் ஏதும் மிஞ்சவில்லை; இறைவன் திருவுருவத்தைக் காண்பது எப்படி? என்று ஏங்கியிருந்தாள். பாண்டிய மன்னனுக்கு அன்றொருக்கால் உலவாப் பொற்கிழி அருளிய சோமசுந்தரப் பெருமானையே தியானம் செய்து கொண்டிருந்தாள். எப்போதும் தன்னையே சிந்தை செய்துகொண்டிருக்கும் பொன்னனையாளுக்கு அருள் புரியத் திருவுளம் கொண்ட சிவ பெருமான் சித்தர் உருவம் கொண்டார். திருநீறு பூசிய திருமேனியும், யோக பட்டம் கட்டிய இடுப்பும், யோக எடையும், செஞ்சடையும் கொண்டு விளங்கினார்.

சித்தர் பெருமான் ஒவ்வொரு நாளும் பொன்னனையாள் வீட்டிற்குச் சிவனடியார்களோடு சேர்ந்து வருவார். ஆனால் உணவு எதுவும் கொள்ளாமல் ஒரு பக்கத்திலே ஒதுங்கியிருப்பார். சிவனடியார்கள் எல்லாரும் திருவமுது செய்துகொண்டிருந்த போது ஒருவர் மாத்திரம்

உணவருந்தாமல் ஒருபுறமாக இருப்பதை வேலைக்காரிகள் உள்ளே எழுந்தருளவேண்டும் என்று வேண்டினர். சித்தர் பெருமானும் நல்லது உங்களது தலைவியை இங்கே வரச்சொல்லுங்கள் என்றார். வேலைக்காரிகள் அகத்தே சென்று பொன்னனையாளைக் கண்டு, அம்மா ! வந்த சிவனடியார்கள் எல்லாரும் அமுது செய்தார்கள் ஒரு அடியார் மட்டும் அரிய குணம் உள்ளவராகப் புன்னகை பூத்த முகத்தோடு விளங்குகிறார். அவர் உங்களைத் தம்மிடத்தே வரும்படிக்கு அழைக்கின்றார் என்று சொல்லினர். ஊழியர் சொன்னதைக் கேட்டாள் பொன்னனையாள். நகைபூத்துக் குலுங்கும் எழிற் கொடிபோலச் சிவனடியார் பக்கம் வந்து தேவரீர் வரவு நல்வரவாகுக என்று கூறினாள். பின்னர் எல்லாவகையான உபசாரங்களையும் செய்தாள். சித்தருக்காகத் தன்னால் முடிந்த எதையும் செய்யச் சித்தமானாள். அதுகண்ட சித்தர் தமக்குள்ளே சிரித்துக் கொண்டு பெண்ணே யாது காரணத்தால் நீ மிகவும் மெலிந்திருக்கிறாய்? என்று வினவியருளினார்.

அது கேட்ட பொன்னனையாள், சுவாமி ! அடியவளுக்கு யாதொரு வருத்தமும் கிடையாது. ஆனால் பூவணநாத சுவாமியின் திரு உருவத்தைக் கருவினாலே கண்டு பிரதிஷ்டை செய்ய எண்ணினேன். கிடைக்கின்ற பொருள் எல்லாம் சிவனடியார்க்கு அமுது படைப்பதிலே சென்று விடுகிறது. ஏதும் மிஞ்சுவதில்லை, நான் என்ன செய்வது? என்று நோக்கம் தெரிவித்தாள். சித்தர் பெருமான், மாதே தருமமே நிலையானது. சிவ தருமமே சிறந்தது சிவனடியார்க்கு அமுதூட்டுதலே மிகச் சிறந்தது என்று கருதித் திருப்பணி செய்து வருகிறாய். இம்மைக்கும் மறுமைக்கும் நன்மை கண்டாய். நீ கோரியபடியே, உன் நற்பெயர் விளங்குமாறு, சுவர்ணமூர்த்தி யொன்று பிரதிஷ்டை செய்வதும் சித்தியாகி விடும். ஐயமில்லை. ஆதலால் நீ உனது வீட்டிலுள்ள இரும்பு, செம்பு, ஈயம், பித்தளை முதலியவற்றால் ஆகிய பாத்திரங்களையெல்லாம் கொண்டு வா என்று அருளினார். உடனே, பொன்னனையாளும் வீட்டிலிருந்த அத்தகைய பாத்திரங்களை எல்லாம் கொணர்ந்து சித்தர் முன்னே குவித்தாள். சித்தர் பெருமான்

அவைமீது விபூதியைத் தெளித்தார். பின்பு மகளே ! இன்று இரவு முழுவதும் இந்தப் பாத்திரங்கள் எல்லாம் நெருப்பிலே புடமிடப்பட்டிருக்கட்டும், காலையிலே இவையெல்லாம் பொன்மயமாக மாறியிருக்கும். அந்தப் பொன்னைக் கொண்டு நீ உனது பக்திக்குகந்த பூவணநாதரின் திரு உருவத்தைப் பொன்னால் அமைக்கலாம் என்று திருவருள் புரிந்தார். பின்னர் மதுரைச் சித்தர் மறைந்தருளினார்.

சித்தர் பெருமான் மறைந்தருளியதும் அவ்வாறு வந்தவர் அன்று உலவாக்கிழியருளிய சோமசுந்தரப் பெருமானே என்பதைத் தெரிந்து கொண்டாள். பெருமகிழ்வு கொண்டவளாகித் திருவருளைச் சிந்தித்தபடியே அந்தப் பாத்திர வகைகளையெல்லாம் நெருப்பிலிட்டாள். புடமிடப்பட்ட கீழ்வகை உலோகங்களெல்லாம் தமது மாசும், களிம்பும், இயல்பும் நீங்கப் பெற்றனவாகிப் பசும்பொன்னாய்த் திகழ்ந்தன.

அந்தப் பொன்னையெல்லாம் கொண்டு பொன்னனையாள் பூவணநாதரது திவ்விய உருவத்தைச் சமைத்தாள். நல்லநாள் ஒன்றிலே பிரதிஷ்டை செய்து தேர், திருவிழா முதலியன சிறப்பாக நடத்தினாள். தினந் தோறும் சுவர்ணமேனிப் பூவண நாதரைக் கண்டு தரிசித்துப் பேரானந்தம் அடைந்தாள். சிலநாள் கழித்து முக்தியடைந்தாள்.

பூவணநாதரும் காலத்திற்கேற்ற கோலம் கொண்டு தனது பொன்மேனி மறைத்து இருந்தருள்வாராயினார்.

### சோழனை மடுவில் வீழ்த்தியது

இராஜேந்திர பாண்டியன் வமிசத்திலே வந்த சுந்த ரேசபாதசேகர பாண்டியன் சிவநேசச் செல்வனாக விளங்கி ஆண்டு வந்தான். குறுநில மன்னர்களையெல்லாம் தனது திறமையால் அடக்கினான். அவனுக்குத் தனது படை பலத்தைப் பெருக்குவதிலே மனம் இல்லை. ஆதலால், பத்துத் தேர்கள், நூறு யானைகள், ஆயிரம் குதிரைகள், பத்தாயிரம் வீரர்கள் என்று எண்ணிக்கையை அளவு கட்டிக் குறைத்து அவர்கட்கெல்லாம் தக்கபடி ஊதியம் கொடுத்தான். அவ்வாறு

செய்ததாலே பொருள் மிஞ்சியது. பொருளை யெல்லாம் சிவத் திருப்பணிக்கே செலவிட்டான் சுந்தரேச பாதசேகர பாண்டியன். சிவபெருமானுக்குக் கண்டிகை, மகுடம் முதலான திருவாபரணங்களைச் செய்தான். கோபுரம், மண்டபம் முதலியவற்றைச் செப்பம் செய்து, திருத்திப் புதுப்பித்தான்.

திருப்பணியிலே நாட்டங்கொண்டு சேனையைச்சுருக்கிய பாண்டியனது நிலையைக் கண்டான் சோழ மன்னன். அவன் பாண்டியனை வெல்லக் கருதி வஞ்சி மாலை அணிந்து ஆயிரக்கணக்கான சதுரங்க சைனியத்துடன் பாண்டியன் நாட்டின்மேல் படையெடுத்து வந்தான்.

அதனை அறியப்பெற்ற சுந்தரேச பாதசேகர பாண்டியன் திருக்கோவில் சென்று எம்பெருமானே! தேவரீரது திருவருளாலே அடியேன் ஆட்சி செய்து வருவதைத் தெரிந்துகொள்ளாமல், எளியேனது சேனையின் குறைந்த எண்ணிக்கையைக் கண்டு காவிரிசோழன் தனது சேனைக் கடலோடு படையெடுத்து வருகிறான். இதற்கு நான் என்ன செய்வது? என்று வருந்தி வேண்டினான், விண்ணொலி எழுந்தது. பாண்டியா ! கொஞ்சமும் நீ அஞ்சவேண்டாம், நாமே சென்று போர் செய்து நீ வெற்றியடையுமாறு செய்கிறோம் என்றது. பாண்டியன் பேருவகையடைந்து திருவருளைச் சிந்தை செய்தவண்ணம் மனை சேர்ந்தான்.

பின்னர் போர்ப்பறைகளும் பல கருவிகளும் முழங்கத் தனது சிறிய படைகளோடு சோழனது சேனாசமுத்திரத்தை எதிர்க்கச் சென்றான். ஆனாலும், இறைவன் திருவருளால் சோழநாட்டவர் கண்களுக்குப் பாண்டியப் படை பல மடங்காகப் பெருகித் தெரிந்தது. சோமசுந்தரப் பெருமானே தனது வேதப்பரிமேல் ஏறிக் கொண்டு பாண்டியன் சேனைக்கு முன்னதாகச் சென்றார். பெருமான் வேட வடிவாகிக் காட்சியளித்தார். காதிலே தந்தக்குழை, கழுத்திலே முத்துமாலை, வெட்சிமாலை, கொண்டையிலே மயிலிறகு, கைகளிலே தந்தக் கடகங்கள் முதலியன விளங்கின. கறுநிறங்கொண்ட திருமேனி கொண்டிருந்தார். அவரது திருக்கரத்திலே கொலைவேல் மின்னியது.

வேடப் பெருமானைச் சோழன் கண்டான். ஆயிரம் குதிரைகளுக்கொரு தனிப்பெரு வீரன் நான் ! நீ எவ்வளவு என்று கர்வத்தோடு வினாவினான். இவ்வளவு தானே நீ ! நான் அளவில்லாத குதிரைகளுக்கு ஒரு சேவகன், காண்பாய், என்று விடையிறுத்தார் கடவுள் வேடனார். அதைக் கேட்ட சோழன் பெரிதும் பயந்து விட்டான். பயந்து நின்ற சோழனை நோக்கி வேடர்பிரான் தனது கைவேலை மின்னல்போல் சுழற்றிக் கொண்டு சினந்து அதிர்ந்து சீறி வந்தார். சோழன் பெரும் பயமடைந்தான். இவன் கைவேலால் நாம் இறப்பதற்குக் கொஞ்சமும் சந்தேகம் கிடையாது என்று பதறி ஓடினான். அது சமயம் இறைவனாகிய வேடன் மறைந்தருளினார்.

அது கண்ட பாண்டியன் குதிரையுடன் ஓடுகிற சோழனைத் துரத்திக்கொண்டு சென்றான். சோழன் திரும்பிப் பார்த்தான். தன்னைத் துரத்திவருவது வேடனல்ல பாண்டியனே என்று கண்டான். உடனே சோழன் திரும்பிப் பாண்டியனைத் துரத்த ஆரம்பித்தான். பாண்டியன் மதுரையை நோக்கி விரைந்தோடினான். ஓடுகின்ற வேகத்தில் தவறி ஆழ்ந்தவோர் கிடங்கிலே விழுந்துவிட்டான். பாண்டியன் விழுந்த மேற்றிசை மடுவிலே துரத்திவந்த சோழனும் தன் குதிரையுடன் விழுந்தான்.

விழுந்துபட்ட இருவருள் சோமசுந்தரப் பெருமான் திருவருளால் சுந்தரேசபாதசேகர பாண்டியன் மடுவிலிருந்து எழுந்து வந்து கரையேறினான். சோழனது ஆடையாபரணங்கள் சதுரங்க சேனைகள் எல்லாவற்றையும் கவர்ந்துகொண்டான் பாண்டியன்.

பின்னர் சோமசுந்தரப் பெருமானுக்குத் தொண்டுகள் பல செய்து நல்லாட்சி செய்து வாழ்ந்தான் சுந்தரேச பாத சேகர பாண்டியன்.

22.06.2019 அன்று முற்பகல் முற்றோதல் நிகழ்வு நடைபெற்றது.
அன்று மாலை இலக்கியப் பூங்கா நிகழ்வில்
முனைவர். சங்கர்தாசு
கனாத்திறம் உரைத்த காதை பற்றிப் பேசினார்.

## Available Knitted Fabric (On Order Basis)

| | |
|---|---|
| **18 GG Rib** | **Dia : 11 - 36** |
| **24 GG Single Jersey** | **Dia : 16 - 36** |
| **28 GG Single Jersey** | **Dia : 18 - 34** |
| **28 GG SJ Openwidth** | **Dia : 30 - 34** |

**Hosiery Yarn Available**

**PC / PV / 100 % COTTON / SLUB / VISCOSE**

***THE PARADISE KNITTERS***

2/311, Periyandipalayam Pirivu,
6th Cross, Hare Rama Hare Krishna Nagar
Mangalam Road, **TIRUPPUR - 641 687**
Mobile : 98652 04051 , 98651 22844 , 98422 70168

**விளம்பரங்கள் வரவேற்கப்படுகின்றன**

| | |
|---|---|
| பின்அட்டை முழுப்பக்கம் கட்டணம் | ரூ. 1000/- |
| அட்டை உள்பக்கம் கட்டணம் | ரூ. 750/- |
| நூலின் உள்பக்கம் கட்டணம் | ரூ. 500/- |

**தொடர்புக்கு – பதிப்பாசிரியர் “திருநெல்லை”**


---

**ஆன்மீக அன்பர்களும் கோவிலூர் மடாலயத்தின் நிகழ்வுகளில் ஆர்வம் கொண்ட பக்தர்களும் திருநெல்லை அம்மன் பெயரில் வெளிவரும் ஆன்மீகத் திங்கள் இதழுக்குச் சந்தா செலுத்தி உறுப்பினராகுமாறு வேண்டுகிறோம்**

**– பதிப்பாசிரியர்**

# நாச்சியப்ப சுவாமிகள் கலை அறிவியல் கல்லூரி

(இருபாலாருக்கும்)

(அழகப்பா பல்கலைக் கழக இணைவு பெற்றது)
(அரசு அனுமதி பெற்றது)

**கோவிலூர் – காரைக்குடி – 630 307.**

தொலைபேசி : **04565 - 234 523** கைபேசி : **94435 02017**

**பயிற்றுவிக்கப் பெறும் பாடப் பிரிவுகள்:**

- B.A., Tamil
- B.A., English
- B.Com.,
- B.Com.(C.A).,
- B.B.A.,
- B.Sc., Maths
- B.Sc., Computer Science
- B.Sc., Visual Communication
- B.Sc., Physical Education
- M.Com
- M.Sc (Computer Science)

**B.Sc. Visual Communication.,**
(அழகப்பா பல்கலைக்கழகப் பகுதியில் முதன் முதலாகத் தொடங்கப்பட்டுள்ள வகுப்பு)

**திரைக்கதை, வசனம் எழுதுதல்,**
**ஒளிப்பதிப்பு, ஒலிப்பதிவு , படத்தொகுப்பு,**
**இயக்கம், செய்தி தயாரித்தல், தொகுத்தல்**
**போன்ற பல துறைகளில் பயிற்சி பெற அரிய வாய்ப்பு !!**

Thirumagal
04565 - 232991